# ஓம் தத் ஸத்

# அத்வைத வேதாந்த விளக்கம்




தொகுப்பு :
மு. இராமன் S.F.R.C.,

உதவி :
இல. சிற்றம்பலம் M.A. (Religion Philosophy)



வெளியீடு : அத்வைத வேதாந்த விளக்க ஞான சபை
81-நாவலர் நகர், மதுரை - 625 010.

விற்பனைக்கல்ல.
2001

ஓம் தத் சத்

# அத்வைத வேதாந்த விளக்கம்

தொகுப்பு : மு. இராமன் S.F.R.C

உதவி : இல. சிற்றம்பலம் M.A. (Religion & Philosophy)

வெளியீடு : அத்வைத வேதாந்த விளக்க ஞானசபை
81 - நாவலர் நகர்
மதுரை - 625010

விற்பனைக்கல்ல.

2001



# நூல் சமர்ப்பணம்

எங்களது வணக்கத்திற்குறிய உபநிஷத்துக்கள் என்ற சுருதியை அருளிச் செய்த அனைத்து சற்குரு ரிஷிமார்களுக்கும், 'சாங்கியம்' அருளிச் செய்த மகாவிஞ்ஞானி கபிலருக்கும், 'திரு மந்திரம்' அருளிச் செய்த திருமூலருக்கும், 'நியாயப் பிரஸ்தானர்' என்ற பிரஹ்ம சூத்திரத்தை அருளிச்செய்த வியாசர் என்ற பாதராயனருக்கும், தமிழகத்தில் சேரநாட்டில் தோன்றிய அத்வைத வேதாந்தி ஸ்ரீமத் ஆதி சங்கரருக்கும் வேதாந்த விற்பன்னர் தாயுமான சுவாமிகளுக்கும், சமரச சுத்த சத்திய சன்மார்க்கம் அருளிச்செய்த ரிஷி சிதம்பரம் இராமலிங்க சுவாமிகளுக்கும், வேதாந்தத்தை அநுஷ்ட்டானம் செய்த பகவான் ஸ்ரீஇராமகிருஷ்ண பரமஹம்சருக்கும், 'வேதாந்த சண்டமாருதம்' சுவாமி விவேகானந்தருக்கும், தமிழகத்தில் வேதாந்தத்தை நிலை நிறுத்தியவரும் இரர்மகிருஷ்ண தபோவனத்தை ஸ்தாபித்தவருமான தவத்திரு சுவாமி சித்பவானந்தா அவர்களுக்கும், எங்களது நேரடி குருவாக விளங்கிய அமரர் முன்னால் துணைத்தலைமை. Railway கட்டுப்பாட்டு அதிகாரி 'வேதாந்த வித்திகர்' மதுரை மகாதேவன் பிள்ளை அவர்களுக்கும் எங்களது பூர்ண-மனமார்ந்த-பணிவுடன் கூடிய பிரார்த்தனையுடன் இந்நூலை அவர்களின் பொன்னார்ந்த திருவடிகளுக்கு சமர்ப்பிக்கிறோம்.

மு. இராமன்
இல. சிற்றம்பலம்

மேயினை மெய்ப் பொருள், விளங்கினை, 'நீ அது'
(தத்துவமஸி)

ஆயினை என்றருள் அருட் பெருஞ்ஜோதி-

– 'அகவல்'–162 ரிஷிசிதம்பரம் இராமலிங்கம்.

<u>பொருள்</u> :- 'மெய்ப்பொருளை நீ தேடினாய் அதனை நீ அறிந்தாய் ~~அதனை~~ நீ அருட்பெருஞ்ஜோதியாய் உள்ளாய்' என்று எனக்கு அருள்பாலித்தாய். அருட்பெருஞ்ஜோதியே !

ஜாதி நீதி குல கோத்ர தூரஹம்
நாம ரூப குண தோஷ வர்ஜிதம்
தேச கால விஷயாதி வர்த்தி – யத் ப்ரம்ம
தத் த்வ மஸி பாவ யாத்மனி

ஜாதி மதம் குலம் கோத்திரம் ஆகியவற்றிற்கு அப்பாற்பட்டதும், பெயர் வடிவம் குணம் குற்றம் ஆகியவையற்றதும், இடம் காலம் காரண காரியம் (ஆகமங்கள் ஈறாகவுள்ள அனைத்து கருமங்களும்) முதலியவற்றைக் கடந்துளதும் எதுவோ அந்த பிரம்மமாக நீ உள்ளாய் என்பதை அறிவாயாக.

– விவேக சூடாமணி – 254

பொருளடக்கம் | பக்கம்

# அத்வைத வேதாந்த விளக்கம்

அத்வைதவேதாந்தி ஸ்ரீமத் ஆதி சங்கரரும் கர்ம காண்டியாண விஸ்வரூபர் என்ற மண்டன மிஸ்ரரும் நிகழ்த்திய ஸம்வாதத்தால் வெளிப்பட்ட வேதாந்தத்தின் சாரம் கீழ்கண்டவாறு விளக்கப்படுகிறது.

இந்த ஸ்ம்வாதம் ஸ்ரீமாதவர் இயற்றிய சங்கரவிஜயத்தில் உள்ளது. இதனை திருநெல்வேலி ஸ்ரீ ஆர். கிருஷ்ணசாமி ஐயர்,M.A.B.L., அட்வகேட் என்ற ஞானானந்த பாரதிசுவாமிகளால் தமிழில் மொழிபெயர்த்து எழுதப்பட்ட நூலின் அடிப்படையைக்கொண்டது. கீழ் கண்டஸ்ம்வாதத்தை 1968-ல் மதுரை தர்ம சாஸ்த்திர சபை வெளியிட்டுள்ளது.

கர்ம மார்க்கம் பக்தி மார்க்கம் பதஞ்சலி யோகம் பாகவதம் முதலியன ஞானமார்க்கத்தைப் போதிக்கவில்லை. கீழான மார்க்கங்களையே போதிக்கின்றன. மேலான ஞானமார்க்கத்தைப் போதிக்கவில்லை. ஆகவே ஞானமார்க்கத்தை விரும்புபவர்கள் இந்த கீழான மார்க்கங்களை விட்டுவிட வேண்டுமென்று பிரம்மசூத்திரம் பகிர்கிறது. ஆகவே விவேகமுடையவர்களுக்கே ஞானமார்க்கம். விவேகமற்றவர்களுக்கு அல்ல.

ஸ்ரீ மத் ஆதி சங்கரர் தம் வேதாந்தத்தைக் கீழ் க்கண்டவாறு விளக்கினார்.

1. நித்யமாயும் ஞானஸ்வரூபமாயும் நிர்மலமாயும் ஏகமாயும் இருக்கும் பரஹ்ம்மம் தான் பரதத்துவம்.

2. அதுவே அஞ்ஞானத்தால் மறைபடும் போது பிரஞ்சமாகத்தோன்றுகிறது. எப்படி கிளிஞ்சல் இருட்டினால் மறைபட்டு வெள்ளியாகத் தோன்றுகிறதோ அவ்விதமாக.

3. அந்த பிரஹ்ம விஷயமான ஞானம் ஏற்பட்டு பிரபஞ்சம் மறைந்து தன் ஸ்வய நிலையிலிருப்பதே முக்தி.

4. இதற்குப் பிரமாணம் உபநிஷத்துக்கள் (நிருபிக்கப்பட்ட உண்மைகள்)

இதைக்கேட்ட மண்டண மிஸ்ரர் நான்காவது அம்சத்தைக் கீழ்கண்டவாறு தாக்க ஆரம்பித்தார்.

1. **மண்டணமிஸ்ரர்**

பிரஹ்மம் பூர்வசித்தமாகவுள்ளது (எங்கும் நிறைந்தது) என்று கூறுகிறீர்கள். அறிய முடியாததைக் கூறுவதுதான் பிரமாணம் (உறுதி செய்யப்பட்ட உண்மை) மேலும் இதைச் செய் செய்யாதே என்றே பிரமாணம் கூறுகிறது. பின் எப்படி உபநிஷத் பிரமாணமாகும்.

**சங்கரர் :**

பிரஹ்மம் பூர்வசித்தமாயிருந்தாலும், அதனை சாதாரணமனிதன் அறிவதில்லை. (பூமியின் மீது வாழும் மனிதன் பூமியுடன் சேர்ந்து மணிக்கு சுமார்

1000 மைல் வேகத்தில் சுற்றுகிறான் இதனை மனிதன் அறிவதில்லை. இது போல) அதைப் போதிப்பதால் உபநிஷத்துக்கு பிரமாணம் உண்டு. ஜீவனும் ஈஸ்வர னும் ஒன்றே என்பதை சாதாரண மனிதன் அறிவதில் லை. இதனை உத்தாலகர் சுவேதஹேதுவிற்குப் போதிக்கிறார். 'அது நீ'-'தத்வ மஸி' (இதன் பொருள் ஜீவனும் ஈஸ்வரனும் ஒன்றே என்பதாகும்) இதற்கு சாந் தோக்கிய உபநிஷத்து 6-9-4 பிரமாணம் ஆகவே உப நிஷத்து பிரமாண மாகும்.

**2. மண்டன மிஸ்ரர்**

ஜீவனும் பிரஹ்மமும் ஐக்கியம் ஏற்பட்டால் நீங்கள் சொல்லுவது சரி. ஈஸ்வரனுக்கு யாகம் செய்யும் ஜீவனை ஈஸ்வரனுக்கு சமானம் என்று சொல்லுவது ஜீவனை ஸ்துதி பாடுவதாகும்.

**சங்கரர் :**

நீங்கள் சொல்லுவது போல உபநிஷத்தில் ஜீவன் யாகம் செய்பவன் என்று கூறவில்லை. நீங்கள் கூறுவது கற்பனை. ஜீவன் ஈஸ்வரன் என்று மட்டுமே கூறுகிறது. ஆகவே நீங்கள் கூறுவது சரியில்லை.

**3. மண்டன மிஸ்ரர்**

சூரியன் வாயு அன்னம் முதலியவைகளை பிரஹ்மமாக பாவனை செய்வது தியானம் செய் என்று சொல்லுவது போல். (உபநிஷத்து) மனதால் சிந்திக் கும் கர்மமாகக் கருதலாம். அப்படிச் செய்தால் பிர

மாணம் எனப்படும்.

**சங்கரர் :**

நீங்கள் சொல்லுவது சரியில்லை. உபநிஷத்தில் மேற்கண்டவைகளை பிரஹ்மம் என்றே கூறுகிறது. ஆகவே ஜீவனை ஈஸ்வரன் என்று பாவனை செய் என்ற கர்மத்தை இங்கு திணிப்பது சரியில்லை.

**4. மண்டன மிஸ்ரர்**

பிரம்மத்தை (நித்திய வஸ்து) அறிகிறவன் பரத்தை அடைகிறான் என்ற உபநிஷத்து வாக்கியத்திலும் பரத்தை அடையவிரும்புபவன் பிரம்மத்தை அறிய வேண்டுமென்று ஒரு விதியை(கர்மத்தை)கற்பித்துக்கொள்ளலாமல்லவா?

**சங்கரர் :**

அறிவு என்பது ஒருகாலும் விதிக்கு விஷயமாகாது (கர்மமாகாது) அறிவு விதிக்கு விஷயமானரல் அதுவும் தியானம் செய்வதுபோல் மானஸ கிரியை (மனதால் சிந்திக்கப்பட்ட காரியமாகும்) மானஸமோ வேறு விஷயமோ செயலின் பலனால் மோட்சம் இருக்குமானால் (சைவம் வைணவம் முதலிய மதங்கள் போதிக்கின்றன) இப்படிக்கர்மத்தால் அடையப்பட்ட மோட்சம் நிரந்தரமாக இருக்கமுடியாது. ஆகவே இவ் விதம் பாவிக்க வேண்டுமென்று நீங்கள் அர்த்தம் செய்

வதானால் மோட்சம் ஒருக்காலும் கிடைக்காது. பொருள் எப்படி இருக்கிறதோ அப்படியே பொருளை அறிய வேண்டும் (ஜீவனும் ஈஸ்வரனும் ஒன்றே என்று அறிய வேண்டும்) ஆகவே இங்கு விதிக்கும் கர்மத்துக்கும் இடமில்லை. இது கற்பனை 'நீ அது' என்றே சாந்தோக்கிய உபநிஷத்துக் கூறுகிறது. ஆகவே இங்கு அடையப்பட்டது என்ற விதிக்கு இடமில்லை.

5. மண்டனர்

தாங்கள் சொல்லுகிறபடி கர்மம் சம்பந்தமில்லாமல் உபநிஷத்திற்கு பிரமாணம் உண்டு என்று வைத்துக் கொண்டாலும் பிரம்மத்திற்கும் ஜீவனுக்கும் ஐக்கியத்தை ஏற்படுத்துகிறது என்று ஏன் வைத்துக்கொள்ள வேண்டும்? இரண்டும் சமானமாக உள்ளது என்று ஏன் வைத்துக் கொள்ளக்கூடாது?

சங்கரர் :

உபநிஷத்தில் ஜீவனும் பிரம்மமும் சமானம் என்ற வார்த்தை இல்லை. எல்லா விஷயங்களிலும் சமானம் என்று கூறினால் தானாகவே அது ஒன்றுதான் என்று ஆகிவிடுகிறது இது தர்க்கம்.

6. மண்டனர்

ஜீவனும் ஈஸ்வரனும் எல்லா விஷயங்களிலும் சமானம் என்றால் ஈஸ்வரன் ஜீவனை விட பெரியவனாக இருக்கலாமே!

**சங்கரர் :**

எல்லா விஷயங்களிலும் சமானம் என்ற பின்பு ஜீவனும் ஈஸ்வரனும் தானக ஒன்றாய் விடுகிறது. இங்கு வாதத்திற்கு இடமில்லை.

**7. மண்டனர்**

இதனை அறியாமை என்று தான் சொல்ல வேண்டும்.

**சங்கரர் :**

அறியாமைதான். வேற்றுமைக்குக் காரண மென்றால் அதனை அறியாமை என்று ஒப்புக் கொள்ளுவதே நியாயம். உண்மையும் கூட.

**8. மண்டனர்**

ஜீவனுக்கும் ஈஸ்வரனுக்கும் சைதன்யம் (ஆத்ம பிரகாசம்) சமமாக இருக்கலாம். சாங்கியர்கள் (கபிலரின் தத்துவம்) ஜகத் காரண வஸ்துவை (பிரபஞ்சத்திற்கு மூலம்) பிரதானம் (இயற்கை) ஜடம் (உயிரற்றது) என்று கூறுகிறார்கள். அசேதனம் என்ற உயிரற்ற அந்த மூலகாரணம் சேதனம் (உயிருள்ளது) என்று போதிக்க இவ்வாக்கியம் கூறப்பட்டதாக ஏன் பாவிக்கக் கூடாது?

**சங்கரர் :**

உபநிஷத் பிரமாணத்தில் ஜீவன் ஈஸ்வரன் போல என்று கூறப்படவில்லை. உபநிஷத்தில்

அது ஆலோசித்தது. என்று கூறப்பட்டுள்ளது (பிருகு தாரண்ய உபநிஷத்து 1.4.10) இதிலிருந்து பிரதானம் சேதனம் என்று போதிக்கப்பட்டுள்ளது. ஆகவே பிர தானம் சேதனம் என்று மறுபடியும் கூறத்தேவை யில்லை உதாரணமாக அசேதனமாகிய சாணத்தில் சேதனமாகிய புழு உண்டாகிறது. சேதனமாகிய மனி தனிடத்தில் அசேதனமாகிய தலைமுடியும் நகமும் வளர்கிறது. ஆகவே சேதனம் அசேதனம் எனக்கூறு வது அறியாமை. உயிருள்ளது உயிரற்றது என்று பேசு வதில் உண்மையில்லை. (பிரம்ம சூத்திரம் இதனையே போதிக்கிறது)

**9. மண்டனர்**

தாங்கள் சொல்லும் ஜீவப்பிரம்ம ஐக்கியம் எனது பிரத்யட்சத்திற்கும் யுக்திக்கும் விரோதமாய்த் தோன்றுகிறது. வேறு சில உபநிஷத்துக்கும் விரோதமாகவுள்ளது.

**சங்கரர் :**

ஜீவனும் ஈஸ்வரனும் வேறு என்பது பிரத்தியட்சமாகவுள்ளது என்று கூறுகிறீர்கள். வேற்றுமை என்பது நம்மால் பார்க்கக் கூடிய தனிப் பொருள் இல்லை. வேற்றுமையாகப் பார்ப்பது குணமே. பொருளல்ல. பொருளை விட்டு விட்டு குணத்தை மட்டும் அறியமுடியாது (கருப்பட்டியிலி ருந்து அதன் குணமாகமாகிய இனிப்பை பிரித்துப்

பார்க்க இயலாது) ஆத்மா பிரத்தியட்சமில்லை. அப்படி இருக்கையில் எப்படி ஆத்மாவை பிரத்தியட்சமாகக் காணமுடியும்? நீங்கள் கூறுவதில் உண்மையில்லை. ஒரு பொருள் ரூபத்திலிருந்து அரூபமாக மாறிவிட்டால் புலப்படாது. அரூபமாகவுள்ளது ரூபமாக மாறினால். (உதாரணமாக தண்ணீரின் மூலவஸ்துவாகிய ஹைட்ரஜன் ஆக்ஸிஜனாக பிரித்தால் காணஇயலாது ஆனால் ஹைட்ரஜனையும் ஆக்ஸிஜனையும் ஒன்றாகச் சேர்த்தால்) புலனாகும்.

**10. மண்டனர்**

வெளி இந்திரியங்களுக்கு ஆத்மா விஷயமில்லை. ஆனாலும் உள் இந்திரியமான மனதிற்கு விஷயமாகலாமல்லவா? (அதாவது மனதினால் ஆத்மாவை அறியலாமல்லவா?)

**சங்கரர் :**

அறியும் புலனுக்கும் அறியப்படும் பொருளுக்கும் தொடர்பு ஏற்பட்டால்தான் அறிய முடியும். ஆத்ம சொரூபம் (நித்தியவஸ்து) புலன்களாலும் மனதாலும் அறிய முடியாது.

**11. மண்டனர்**

எப்படியென்று எனக்குச் சொல்லத் தெரியவில்லை. ஆனாலும் ஜீவனும் ஈஸ்வரனும் வேறு என்பதை நான் உணர்கிறேன்.

**சங்கரர் :**

நீங்கள் கூறுவது உண்மை. ஆனால் நீங்கள் கூறும் ஜீவனும் ஈஸ்வரனும் வேறு என்ற வேற்றுமை உங்களது அஞ்ஞானத்தின் வெளிப்பாடு, சொரூபமான ஆத்மாவை (ஈஸ்வரன்) அறிய முடியவில்லை. அதனை (அஞ்ஞானத்தை) நீக்கத் தான் உபநிஷத்து வழிகளைப் போதிக்கிறது. அஞ்ஞானத்தை நீக்கிவிட்டால் ஈஸ்வரனை அறிய முடியும். அதாவது ஜீவனும் ஈஸ்வரனும் ஒன்று என்பது அறியப்படுகிறது. உதாரணமாக இருளில் பாம்பாகத் தெரியும் கயிறு ஒளிவந்தவுடன் கயிறாகத் தெரிவது போல் அஞ்ஞானம் நீங்கி விட்டால் சொரூபியான ஈஸ்வரன் அறியப்படும்.

**12. மண்டனர்**

பிரத்தியட்சம் தவறாகலாம். யுக்தி கூடவா தவறும்? ஆகவே உங்கள் கருத்து சரியென்று எனக்குத் தெரியவில்லை. எது சர்வ வல்லமை இல்லையோ அது ஈஸ்வரன் ஆகாது. உதாரணம் குடம் போல. ஜீவன் சர்வ வல்லமை அல்ல என்ற அனுமானம் எப்படித் தவறும்?

**சங்கரர் :**

உங்கள் அனுமானம் சரியில்லை. குடம் ஈஸ்வரன் இல்லை என்று யார்சொன்னது? குடம் ஈஸ்வரனே

**13. மண்டனர்**

அதெப்படி குடம் ஈஸ்வரனாகும்? குடம் ஈஸ்வரன் இல்லை என்பதில் என்ன தவறு? ஞானம் ஏற்பட்டாலும் இந்த வேற்றுமை எப்படி விலகும்?

**சங்கரர் :**

நீங்கள் கூறுவது சரியில்லை. சுக துக்க அனுபவமுள்ள மனிதனை நீங்கள் நித்திய வஸ்துவாகிய ஆத்மா என்று நினைக்கிறீர்கள். அஞ்ஞானியும் குடமும் அநித்யமானவர்கள். அநித்யமான நிலையில் அவைகள் வேறு வேறாகத்தான் காட்சியளிக்கும். மனிதனுக்கும் குடத்திற்கும் மூலகாரணமான நித்ய வஸ்துவாகிய ஆத்மாவை அறிந்தால் வேற்றுமை இல்லாமல் போகும். இந்தத் தத்துவமே ஆத்மா என்று அறிந்தால் மனிதனும் குடமும் மூலத்தில் ஒன்று என்பதை அறிவீர்கள். ஒன்றாய்ப் பார்ப்பது ஞானம் வேறாய்ப் பார்ப்பது அஞ்ஞானம், ஆகவே அனைத்தும் ஈஸ்வரனே.

**14. மண்டனர்**

தாங்கள் கூறுவது சரியாகத் தோன்றவில்லை. மனிதனுக்கும் குடத்திற்கும் உள்ள வேற்றுமை, இந்தப் பதார்த்தங்களின் குணங்களைப் பொறுத்தது. இந்த குணங்களை நீக்கினால் அவைகள் ஒன்றாகத் தெரியலாம். அப்படியானால் அவைகளை வேறு வகையில் ஆராய்ந்தாலும்

இயல்பிலேயே வேறுபட்டிருக்கின்றன. பின் எப்படி ஒன்றாகும்? குடமும் ஈஸ்வரனும் இயல்பில் வேறுபட்டவைகள் அல்லவா?

**சங்கரர் :**

இவைகளின் இயல்பு வேறுபட்டவைகள் என்பதற்கு என்ன பிரமாணம் உள்ளது? ஒரு பொருளின் இயல்பை அறிய வேண்டுமானால் அதனை மறைத்துக் கொண்டு இருக்கும் அநித்தியமான நாம ரூபங்களை நீக்கிப்பார்க்க வேண்டும். (பனிக்கட்டி நீராகவும், நீர்ஆவியாகவும்; ஆவி ஹைட்ரஜன் ஆக்ஸிஜன் என்ற வாயு நிலையிலுள்ள அணுக்கலாகவும், அணுக்களைச் சிதைத்தால் நியூட்ரான் எலக்ட்ரான் புரூட்டான் என்னும் அணுவினும் நுண்ணியதாகவும் அவைகளைச் சிதைத்தால் அதற்கப்பால் நாம ரூப மற்ற பொருளாகவும் மாறுகிறது. இதனைப் பிரளயம் என்று கூறுவர். பின்பு இவைகளே தோற்றத்திற்கு வருவதை பரினாமம் அல்லது சிருஷ்டி என அறிவோம்) அவ்விதம் நாம ரூபங்களை விலக்கிப் பார்த்தால் குடத்தின் உள் தத்துவத்திற்கும் ஈஸ்வரனின் உள் தத்துவத்திற்கும் வேற்றுமை உண்டு என்று சொல்லுவதற்கு காரணமில்லை. வேறு வேறாகப் பார்ப்பது அஞ்ஞானம். அஞ்ஞானத்தை நீக்கிவிட்டால் எல்லாம் ஏக பிரம்ம தத்துவமாகமப் பிரகாசிக்கும். ஆகவே உங்கள் கருத்து வாதத்தில் நிலைபெறாது.

உங்கள் அனுமானத்திற்கு இடமில்லை. ஈஸ்வரன் நாம ரூபமற்ற நித்தியவஸ்து. அதுவே நாம ரூபத்தோடு தோன்றும் பொழுது அநித்தியவஸ்த்துவாகப் பகரப்படுகிறது. நாம ரூபம் அநித்தியம் (நிலையற்றது) சொரூபம் நித்தியம்.

**15. மண்டனர்**

இதுவன்றி உபநிஷத்திலேயே ஒரே மரத்தில் கர்மபல்னை அனுபவித்துக் கொண்டு ஒரு பறவையும், மற்றொரு பறவை கர்ம பலனை அனுபவிக்காமல் சாட்சியாக மட்டும் இருப்பதாகச் சொல்லுகிறதே. ஆகவே ஜீவன் வேறு ஈஸ்வரன் வேறு எனத் தெரிகிறது.

**சங்கரர் :**

ஜீவன் வேறு ஈஸ்வரன் வேறு என்று சாதாரணமாக நாம் அனைவரும் கருதுகிறோம். இதையே மேற்கண்ட உபநிஷத்து போதிக்கின்றது என்றால் அது பிரமாண்யம் ஆகாது. உண்மையில் இந்த உபநிஷத்தில் கண்டிருக்கும் இரண்டு பறவைகளைப் பற்றிக்கூறியது ஜீவனும் ஈஸ்வரனும் ஒன்று என்று சொல்லுவதற்கே விளக்கப்பட்டுள்ளது. மயக்கத்திலிருக்கும் ஜீவனையும், மயக்கமற்ற ஆத்மாவையுந்தான் இங்கே குறிப்பிடுகிறது. இதற்கு விரிவான வியாக்கியானம் சாங்கிய இரகஸ்ய பிரமாணத்தில் கூறப்பட்டுள்ளது. உதாரணமாக ஜீவனுக்கு கனவில் மனது வேலை

செய்கிறது, ஆனால் இந்த ஜீவனுள் இருக்கிற சொரூபமாயுள்ள ஆத்மா சாட்சியாக மட்டுமே யுள்ளது. ஆகவே கனவு எப்படிப் பொய்யோ அப்படி ஒரு பறவை உண்பதாகக் கருதப்படுவதும் பொய்யே. எப்படி கனவில் கண்ட பறவை நனவில் பொய்யாகிறதோ அப்படி அந்த மனமும் ஆத்மாவோடு இணையும் போது மனம் காணாமல் போய்விடுகிறது. அது போல் உணவுண்ணும் பறவையும் உண்ணாமலிருக்கும் பறவையும் அந்நியமானதன்று. ஒன்றே இதையே இவ்வுபநிஷத்து விளக்குகிறது. ஆகவே ஜீவனும் ஈஸ்வரனும் ஒன்றே.

**16. மண்டனர்**

அப்படி என்றால் புத்தி உயிரறற்றதா? அந்த உயிரற்ற புத்தி கர்மபலனை அனுபவிக்கிறது என்று சொல்ல முடியுமா?

**சங்கரர் :**

இயல்பாக இரும்புக்கம்பிக்குச் சுடும் தன்மை கிடையாது ஆனால் நெருப்பிலிடும் போது சுடும் தன்மை பெற்றுவிடுகிறது. இதனை நாம் இரும்புக் கம்பி சுடுகிறது என்று சொல்லுகிறோம். இது பிழை. அந்த இரும்புக்கம்பியில் ஏற்றப்பட்ட சூடு தான் சுடுகிறது என்பது உண்மை. அவ்விதமே ஆத்ம சைதன்யத்தால் பிரகாசிக்கின்ற புத்தி தான்

அனுபவிப்பதாக கருதுகிறது. இரும்பு தானே சுடும் என்பது எவ்வாறு பொய்யோ அவ்வாறே புத்திக்கு எந்த செயலும் இல்லை. ஆகவே புத்தி கர்ம பலனை அனுபவிக்கிறது என்று சொல்லுவதில் உண்மை இல்லை.

**17. மண்டனர்**

உபநிஷத்தில் ஈஸ்வரனையும் ஜீவனையும் வெளிச்சத்திற்கும் நிழலுக்கும் ஒப்பிடப்படுகிறது. ஆகவே ஈஸ்வரனும் ஜீவனும் வேறு என்பதை அறியவில்லையா?

**சங்கரர் :**

ஏற்கனவே ஜீவனும் ஈஸ்வரனும் ஒன்று என்று முடிவு செய்யப்பட்டு விட்டது அதற்குப் பிரமாண்யம் உண்டு. அதே போல் இங்கு இருளும் ஒளியும் ஆத்மாவில் கிடையாது (ஞானிக்கு சூரியன் உதிப்பதுமில்லை மறைவதுமில்லை. உபநிஷத்து) அப்படி இல்லாத ஒன்றை திரும்பப் பேசுவது ஏற்கனவே முடிவு செய்த உண்மைக்கு இந்தக் கேள்வி முரணானது. ஆகவே வாதத்தை முதல் கேள்விக்கு கொண்டு செல்லக் கூடாது.

**18. மண்டனர்**

தங்கள் வார்த்தை விசித்திரமாக இருக்கிறது. வேதாந்தத்திலுள்ள விஷயத்தை அனுசரித்து உலக

சாஸ்த்திரங்களில் கூறப்பட்டிருக்குமானால் அந்த சாஸ்திரத்திற்குப் பிரமாண்யம் உண்டா? அல்லது உலக விஷயங்களைக்கூறும் சாஸ்த்திர வார்த்தைக்குப் பிரமாண்யம் உண்டா?

**சங்கரர் :**

நாம் ஆரம்பத்திலேயே எது உலக சாஸ்த்திரத்தால் அறிய முடியாதோ அப்படிப்பட்ட விஷயத்தை சுருதி போதிப்பதனால் சுருதிக்குப் பிரமாண்யம் உண்டு என்பதை இருவரும் ஏற்றுக் கொண்டோம். அதை இப்பொழுது மறந்து பேசுகிறீர். காணும் காட்சியையோ அனுமானமோ அல்லது வேறு எந்த சாஸ்த்திரத்தாலோ சுருதியில் சொல்லியவற்றை நிருபிக்க உபமாணப்படுத்தி பேசினால் அந்த சுருதி வாக்கியத்தின் உண்மைத் தன்மையைச் சிதைத்து விடும். எப்படி என்றால் மகனைப் பார்த்து அப்பா போன்றே உருவம் கொண்டிருக்கிறாய் என்று பேசுவது நடைமுறையுண்மை. இதை மாற்றி மகனிடம் உன் அப்பா உன்னைப் போல உருவம் தரித்துள்ளார் என்று கூறுவது எப்படி இயல்பு ஆகாதோ அது போல பேசுகிறீர்.

**19. மண்டனர்**

தாங்கள் இவ்வளவு சொல்லியும் எனது மனதிற்குள் ஒரு சந்தேகம் எழுகிறது. அதாவது ஜைமினி மகரிஷி இயற்றிய பூர்வ மீமாம்ஸ

சூத்திரங்களில் தவறியிருப்பாரா? என்று தோன்றுகிறது (ஜைமினிகர்மத்தால் அனைத்தையும் அடைந்து விடலாம் என்று கூறுவதே பூர்வ மீமாம்ஸம்)

**சங்கரர் :**

அம்மகரிஷி தவறவேயில்லை. ஆத்ம ஞானம் ஏற்படுவதற்கு முதற்படியான கர்ம மார்க்கத்தைப் போதித்தார். ஞான தத்துவங்களை மறுக்கவில்லை (சனாதன தர்மத்தில் கர்ம மார்க்கம் பக்தி மார்க்கம் யோக மார்க்கம் ஞான மார்க்கம் எனும் நான்கு வகை மார்க்கங்கள் பேசப் படுகின்றன). முதல் மூன்று மார்க்கங்களும் தர்மத்தை நிலை பெறச் செய்வதற்காக நமது மூதாதையர் பின் பற்றிய உபாயமாகும். ஞானமார்க்கமென்பது மதங்கடந்ததும் தர்மம் கடந்ததுமான அறிவுப் பூர்வமான ஞானத்தைப் பேசுகிறது. ஞானம் பேசும் பொழுது கர்மம் பக்தி யோகம் மார்க் கங்களுக்கு இடமில்லை. ஞானத்தையடைய முதல் மூன்றையும் அடைந்தவன் ஞானத்தைப் பெருவதற்கான பக்குவத்தையடைகிறான். அதில் ஒன்று தான் கர்மமார்க்கம். இதற்குப்பிரமாண்யம் என்று சொல்லக்கூடாது. சாதாரணமனிதன் அறியமுடியாத சத்தியத்தைப் பேசுகின்ற ஞானமார்க்கமான சாஸ்த்தி ரங்களுக்குப் பிரமாண்யம் உண்டு.

**20. மண்டனர்**

அவ்விதம் ஆத்மாவிற்கு வேறுபடாத ஞான சொரூபியான ஈஸ்வரனை அவர் ஒப்புக் கொள்வாரானால் அவர் ஏன் கர்மாவே பலனைக் கொடுக்கிறது என்று சொல்லி இதற்கு ஈஸ்வரன் தேவையில்லை என எழுதினார்?

**சங்கரர் :**

கர்ம பலனை ஈஸ்வரனே கொடுக்கிறார் என்று கற்பனை செய்ய அவசியமில்லை. ஈஸ்வரன் இருக்கிறார் என்பதை யுக்தியினால் மாத்திரம் அறிந்து கொள்ள முடியாது என்று கூறினாரே தவிர ஈஸ்வரனை சுருதி பிரமாணத்தாலேயே அறியமுடியும் என்பதை ஒரு போதும் மறுத்துச் சொல்லவில்லை.

# அத்வைத வேதாந்த தத்துவத்தை அறிவதற்கும் அனுஷ்டிப்பதற்குமான எளியமுறை

மேற்கண்ட சம்வாதத்தில் கண்ட அத்வைத தத்துவம் பற்றி படித்தவர் முதல் பாமரர் வரையுள்ள அனைத்து உலக மக்களும் அறிந்தும் அநுஷ்டித்தும் உய்வதற்கான சில கருத்துக்கள் பகரப்படுகிறது.அதனை அவரவர் விருப்பம் போல் சிந்தித்து ஆராய்ந்து பின்பற்றியோ அல்லது நிராகரித்தோ நடைமுறைபடுத்திக்கொள்ள அவரவரே அதிகாரியாவர். ஆகவே அவரவர் சிந்தனைக்கு விட்டு விடப்படுகிறது.

நமது பாரத தேசத்தில் பிரமாணமாகக் க்ருதக்கூடிய உபநிஷத்துக்கள் 108 ஆகும். இதில் 10 உபநிஷத்துக்கள் மிகப்பழமை வாய்ந்த தென்றும் மற்றவை பிற்காலத்தைச் சார்ந்தவை எனும் கருத்து நிலவுகிறது. இந்த அத்வைத தத்துவத்தை அறிவுப் பூர்வமான தர்க்கத்தால் நிரூபிக்கும் சாஸ்த்திரமாக பிரம்ம சூத்திரம் உள்ளது. இவைகளை ஸ்ரீமத் இராமகிருஷ்ணமடம் பதிப்பித்து குறைந்த விலையில் விற்பனை செய்கிறது. இப்பொழுது உபநிஷத்தில் ஒரு உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். பிருகுதாரண்யஹோபநிஷத்தில் (1:4:10) ‘எவனொருவன்

வேறான தேவதையை உபாசிக்கிறானோ (ஜீவனும் ஈஸ்வரனும் வேறுவேறு என்று) அவன் அறியாதவன் (ஈஸ்வரத்தை அறியாதவன்) அவன் தேவர்களுக்குப் பசுவைப் போன்றவன்'. மேற்கண்ட சம்வாதம். நிரூபிக்கப்பட்ட அத்வைத தத்துவத்தை உறுதி செய்கிறது. அத்துடன் மதவாதிகள் பாமரனை எவ்விதம் சுரண்டுகிறார்கள். என்பதையும் விளக்குகிறது. மதவாதிகள் பாமரனை பசுவாகக் கருதி பால்கறக்கவே பயன் படுத்துகிறார்கள். பசுக்களின் நலனில் எவ்வித நாட்டமும் அற்றவராயிருக்கிறார்கள். சத்தியத்தை அறிய முயற்சிக்கவும் மனிதனை அறியவிடாது மதம் என்னும் வலையில் சிக்கவைத்துள்ளார்கள். இந்தக்கருத்தை மாண்டூக்ய உபநிஷத்து மனிதனில் நான்கு அவஸ்தைகளை கூறுவதன் மூலம் போதிக் கிறது. ஜாக்கிரம் சொப்பனம் சுசுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளை அநித்தியமானவை என்றும் நான்காவது அவஸ்தையாகிய துரியத்தை நித்தியவஸ்து(ஈஸ்வரம்) என்றும் குறிப்பிடுகிறது. இந்த உபநிஷத்து சிந்தனைக்குறியது. ஒரே சூரியன் நீர் நிலைகளில் பலவாகக் காட்சியளிக் கின்றது. நீர் வற்றியவுடன் உண்மை சூரியன் மட்டுமே இருப்பது தெரியவருகிறது. அதுபோல மனிதனுக்கு முதல் மூன்று அவஸ்தைகளும் அநித்தியமே. நான்காவது அவஸ்தையாகிய துரியம் மட்டுமே சத்தியமாகும். ஆகவே ஈஸ்வரம்

எங்கும் எதிலும் வியாபித்திருப்பதால் பூரணம் என்று கூறுகிறது. ஆகவே ஜீவர்களாகிய மனிதர்கள் தாம் பிரம்மம் என்பதை ஏற்றுக் கொண்டாலும் ஏற்றுக்கொள்ளாவிட்டாலும் அறிந்தாலும் அறியாவிட்டாலும். அவர்கள் பிரம் மமே - சத்தியமே - ஈஸ்வரமே சத்-சித்-ஆனந்தமே - பரஞ்சோதியே - அருட்பெருஞ்ஜோதியே

அத்வைத தத்துவத்தை நடைமுறையில் போதிப்பதற்கே சத்-சித்-ஆனந்தம் என்ற தாரக மந்திரம் போதிக்கப்பட்டது. இதில் 'சத்' என்பது நித்திய வஸ்து, சித்-என்பது அறிவு பூர்வமான மனிதனையும், ஆனந்தம் என்பது அதனது இயல்பையும் குறிப்பதாகும். அஃதாவது ஈஸ்வரம் ஜீவனாகவும் ஜீவராசிகளாகவும் அவைகள் அனுபவிக்கும் ஆனந்தமாகவும் பேசப்பட்டாலும் அவை மூன்றும் ஈஸ்வரமாகிய சத்தியம் ஒன்றையே குறிக்கும் என்பது தான் உண்மை.

சாந்தோக்கியோபநிஷத்து 8:3:5-லும் பிருகு தாரண்ஹோபநிஷத்து 5:5:1-லும் சத்தியத்தைப் பற்றிப் பேசுகிறது. ஈஸ்வரம் நித்திய வஸ்து எனப் பேசும் பொழுது பிரம்மம் என்றும் பிரபஞ்சத் தைப் பற்றிப் பேசும் போது அநித்திய வஸ்து வென்றும் கூறுகிறது. பிரம்மம் பிரபஞ்சமாகக் காட்சியளிக்கும் போது இந்த நித்திய அநித்திய

வஸ்துகளை 'சத்தியம்' என்னும் ஒரு சொல்லால் குறிப்பிடுகிறது. பிருகு தாரண்ய உபநிஷத்து 5:4:1-ல் 'பிரம்மம் சத்தியம்' என்றே கூறுகிறது. பகவான் சங்கரர் இயற்றிய மனீஷா பஞ்சகத்திலும் இதனை வலியுறுத்தி ஐந்து சுலோகங்களாகப் பாடியுள்ளார். ஆகவே பிரபஞ்சமும் ஜீவ கோடிகளும் பிரம்மத்தின் ரூபமாக வெளிப் பட்டுள்ளது. ரூபமல்லாத சொரூபமாக இருக்கும் பொழுது அதைப் பிரம்மம் என்று கூறுகிறது. சத்தியம் என்ற சொல்லுக்கு உண்மை என்ற பொருள்பட சிலர் பேசுகின்றனர். இது பிழைபட்டது. சத்தியம் என்பது நித்திய அநித்திய வஸ்துவை ஒரே சொல்லால் குறிப்பதாகும். உண்மை என்பது ஒரு கருத்தேயாகும். இது வஸ்துவிலிருந்து வேறுபட்டது. வஸ்துவும் கருத்தும் ஒன்றல்ல. முண்டகோபநிஷத்து 3:1;6-ன் 'சத்தியமேவஜெயதே' என்பதன் பொருள் 'பிரம்மத்தின் மாட்சியே பிரபஞ்சமாக மிளிர்கிறது' என்பதாகும். இதனை 'வாய்மையே வெல்லும்' என்று பொருள் கொள்ளுவது பிழை. மத்திய மாநில அரசுகள் தங்களது அரசு சின்னங்களில் 'சத்திய மேவ ஜெயதே' என்று எழுதியுள்ளது நமது பாரத தேசம் இதனைப் பின்பற்றி நடப்பதையே குறிக்கோளாகக் கொண்டுள்ளது.

இதனை ரிஷி சிதம்பரம் இராமலிங்கம் அவர்கள் தனது அகவலில்

இக நிலைப் பொருளாய் பரநிலைப் பொருளாய்
அகமறப் பொருந்திய அருட்பெருஞ்சோதி ........
இயல்பினில் இயல்பாய் இயல்பே இயல்பாய்
உயலுற விளங்கும் ஒரு தனிப்பொருளே என்கிறார்.

இந்தத் தத்துவத்தை வேதாந்தமும் சாங்கியமும் கீழ்கண்டவாறு விளக்குகின்றன. நித்திய வஸ்துவாகிய ஈஸ்வரம் முதல் தோற்றமாகிய பிரணவநாதமாக(ஓம்)வெளிப்படுகிறது. பிரணவத்திலிருந்து முக்குணங்களாகிய தாமஸம் இர்ஜஸ் சத்துவம் எனும் குணங்களாக வருகின்றன. இவைகளின் கூட்டு வெளிப்பாடுதான் பிரகிருதி என்று வேதாந்தம் விளக்குகிறது. சாங்கியத்தில் இந்தப் பிரகிருதியை 'பிரதானம்' என்றும் இயற்கை என்றும் குறிப்பிடுகிறது. இது ஜடம் என்றும் கூறுகிறது. இதினின்றும் முதல் தோற்றம் 'மஹத்' ஆகும். மஹத்திலிருந்து ஆகாசமும் பிராணனும் வெளிப்படுகின்றன. இதற்கு மேலுள்ளதை சாதாரணமனிதன் அறிய முடிய்வில்லை. இதற்குக் கீழுள்ளவைகளையே சாதாரணமனிதனால் அறியமுடிகிறது. ஆகாசமும் பிராணனும் கூட்டுச்சேர்க்கையால் வாயுக்கள் உண்டாகின்றன. அதிலிருந்து தேஜஸ் எனும் ஒளி உஷ்ணம் முதலியன உண்டாகின்றன. இதிலிருந்து

திரவங்கள் தோன்றுகின்றன. திரவத்தில் ஒன்றே நீராகும். இதிலிருந்து ஜடமாகக் கூறப்படும் பூமியும் இவைகளின் கூட்டுச் சேர்க்கையால் அண்டகோடி ஜீவர்களும் தாவரங்கள் முதலியன தோன்றுகின்றன என்பது சாங்கிய தத்துவம். இதனை சிருஸ்டி என்று அழைக்கின்றனர். இவைகளைத்தான் நாம் புலன்கள் மூலம் அறிகிறோம். இந்த சிருஷ்டி பிரளயத்தின் காரணமாக மறுபடியும் ஈஸ்வரமாகிய நித்தியத்தில் ஐக்கியமாகி விடுகின்றன. வேதாந்தமும் சாங்கிய தத்துவத்தை ஏற்றுக் கொள்ளுகிறது. ஆகவே ஜீவனும் ஈஸ்வரனும் வேறுவேறு என்றும் அவைகள் இணைந்து ஒன்றாகின்றன என்றும் குறிப்பிடும் துவைத மாகிய சின்முத்திரை நிராகரிக்கப்படுகிறது. மேலும் நரகம் சொர்க்கம் கடவுள் தீர்ப்பு என்பவைகள் மதவாதிகளால் போதிக்கப்படுகின்ற கற்பனை என்று எளிதில் அறிந்து கொள்ளலாம்.

இன்றைய விஞ்ஞானத்தால் ஆகாசமும் மனிதனின் மனமும் எதனால் ஆனது என்பதை அறியமுடியவில்லை. ஆனால் ரிஷிகள் அக் காலத்தே அறிந்துள்ளனர். அந்த ஆகாசம் எங்கும் ஒளிமயமாகவுள்ளது. ஒளியை மனிதன் கண்களால் காணவியலாது. ஆகவே நாம் ஆகாசம் ஒளிமாயுள்ளது என்பதை அறியமுடியவில்லை.

இந்த ஒளி ஒரு பொருளின் மீதுபட்டுச் சிதறும் பொழுதுதான் இந்தப் பொருள்களை மனிதன் பார்ப்பதன் மூலம் ஒளியை அறிகிறான். இதனை ஒளி என்று அழைக்கின்றோம். இதனால்தான் நாம் புலன்கள் மூலம் ஒளியை அறிகின்றோம். ஆகவே ஒளிக்கு ரூபமில்லை. இன்றுதான் விஞ்ஞானிகள் சேட்டிலைட்களின் மூலம் ஆகாசம் ஒளிமயமானது என்று கண்டு உணர்கின்றனர். இதனையே 2000-ம் ஆண்டுகளுக்கு முன்பே பிரம்ம சூத்திரம் பகர்ந்துள்ளது.

இதைப் போன்றே மனதையும் எதனால் ஆனது என்று விஞ்ஞானிகள் அறியாதிருக்கின்றனர். நமது மனம் என்பது நாம் உண்ணும் திட திரவ உணவுகளே. அது சூட்சம ரூபம் அடையும் பொழுது மனதாக மாறுகிறது. ஒரு மனிதன் பல நாட்கள் உணவு உண்ணாவிட்டால் அவனுக்கு மனம் வேலைசெய்வதில்லை. ஆகவே நாம் உண்ணும் உணவே நமது மனமாக மாறுகிறது என்பதைக் கண்டு அறிந்துள்ளனர். (சாந்தோக்கிய உபநிஷத்து 6:5:1) மனதிற்கு உரைவிடம் பிராணன் என்று கூறுகிறது. (சாந்தோக்கிய உபநிஷத்து 6:8:2)

அத்வைத கருத்தை பகவான் சங்கரர் தமது நூலாகிய விவேகசூடாமணியில் 254-சுலோகத்தில்

ஜாதி மதம் குலம் கோத்திரம் இனம் நாடு காலம் காரண காரியம் ஆகமங்கள் ஈறாகவுள்ள அனைத்துக் கருமங்களும் ஆகமங்கள் முதலியன கற்பனைகள் என்றும், பாமர மக்கள் மீது திணிக்கப்பட்டவைகள் என்றும் சாடுகிறார். இந்த அத்வைதக் கருத்தைத் தனது குறிப்பில் 'தேட முடியாததைத் தேடிய பாவம் பேச முடியாததைப் பேசிய பாவம், சிந்திக்க முடியா ததைச் சிந்தித்த பாவம்' எனக் குறிப்பிடுகிறார். இங்கு ஈஸ்வரனும் ஜீவனும் வேறு வேறு என்று பொருள் கொள்கின்றனர். ஜீவனும் ஈஸ்வரனும் ஒன்று என்பதை உறுதிப்படுத்தவே கூறப்பட்டது. இரண்டும் ஒன்று என்ற போது யார் யாரைத் தேடுவது? பேசு வது சிந்திப்பது என்னும் வினாக்கள் அறிவற்றது என் பதைக் குறிப்பிடவே இதனைக் குறிப்பிடுகிறார். இதனை சாந்தோக்கிய உபரிஷத்து 3:14:1 மற்றும் 3:14:2-ல் இந்தப் பிரபஞ்சம் பிரமத்திடமிருந்தே வந்தது. பிரம்மத்திடமே ஒடுங்குகிறது. பிரமமும் பிரபஞ்சமும் ஒன்று எனும் அத்வைதக்கருத்தை வலியுறுத்துகிறது பிருகுதாரண்யஹோாவுபநிஷத்து 1:4:10-ல் 'அகம் பிரமாஸ்மி' (நான் பிரம்மம்) என்று அறிய வேண்டும். அதுவேதான் 'நான்' என்பதை அறிந்து கொள்ள வேண்டுமெனக்குறிப்பிடுகிறது.

சாந்தோக்கிய உபநிஷத்து 7-வது அத்தியாயத்தில் சோகமுற்ற நாரதர் ரிஷி சனந்தகுமாரரை அனுகி நான் ருக் யஜூர் சாம அதர்வணவேதங்களையும் இதி

காச புராணங்களையும் மற்றும் பல சாத்திரங்களை யும் கற்றிருந்தும் என் உள்ளத்தில் சோகம் மேலெழு கிறது. எனது இந்த சோகத்தை நீக்கி சாந்தம் எய்துவ தற்கு உபதேசித்து அருளவேண்டுமென்று பணிந்து கேட்டார். இதைக் கேட்ட சனந்தகுமாரர் நீர் கற்றவையனைத்தும் அபராவித்தை. இந்த உலகம் சம் பந்தப்பட்டது. ஆகவே இவைகள் கீழானவைகளாகும். இவைகளை விட்டு விடு. உமக்கு சோகத்தை நீக்கும் மேலான பராவித்தையைப் போதிக்கிறேன் என்று கூறி ஆத்மாவே அனைத்துப் பிரபஞ்சமாக மிளிர்ந்துள்ள து. இந்த ஆத்மா நீதான் என்றும் அத்வைத தத்துவத் தைப் போதித்தருளினார். இதைக் கேட்ட நாரதர் சோகம் நீங்கப்பெற்று சாந்தமடைந்தார். இந்த மெய்ஞ் ஞானத்தைப் போதித்த சனந்த குமாரரை 'ஸ்கந்தர்' என்று அழைப்பர். இவரது பெயரைத் தமிழ்படுத்திய அறிஞர்கள் கந்தர் கந்தசாமி போன்ற பெயர்களைக் கொண்ட 'கந்தர் அனுபூதி' 'கந்தர் அலங்காரம்' எனும் நூல்களை இயற்றினர்.

உபநிஷத்துக்களில் வேதாந்த சாரத்தைப்பற்றி விளக்குகிறது. வேதாந்தசாரமில்லாத சில சக்கைகளும் ஆங்காங்கே தென்படுகிறது. ஞானமார்க்கம் வேண்டு பவர்கள் வேதாந்த சாரத்தை மட்டும் எடுத்துக்கொண்டு தேவையற்ற சக்கையை விட்டுவிட வேண்டும்.

திருமூலர் திருமந்தரத்தில் அத்வைதிகளை 'சுத்த

சைவர்' என்றும் மதவாதிகளை 'அசுத்த சைவர்' என்றும் சாடுகிறார். அவர் இயற்றிய திருமந்திரத்தில் 'மரத்தில் மறைந்தது மாமதயானை மரத்தை மறைத்தது மாமதயானை பரத்தை மறைத்தது பார் முதற்பூதம் பரத்தில் மறைந்தது பார்முதற்பூதமே' என்று கூறுவதன் மூலம் அத்வைதத்தைப் போதிக்கிறார். தாயுமான சுவாமிகள் தமது மௌனகுரு வணக்கத்தில் 'துவைதம் சிற்றறிவே' என்றும் 'அத்துவித மதமாகி' எனும் பாடலில் மதங்கள் தங்கள் வேறுபாடுகளை இழந்து அத்வைதத்தில் மறைந்து போகின்றன என்றும் பகர்கிறார்.

ரிஷி சிதம்பரம் இராமலிங்கம் அவர்கள் தாம் இயற்றிய அகவலில்

*சாதியும் மதமும் சமயமும் பொய்யென*
*ஆதியில் உணர்த்திய அருட்பெருஞ்சோதி.....*
*உயிருள்யாமும் எம்முள் உயிரும் இவையுணர்ந்து*
*உயிர் நலம் பரவுக என்று உரைத்த மெய்ச்சிவமே.....*
*விண்ணினுள் விண்ணாய் விண்ணடு விண்ணாய்*
*அண்ணிவயங்கும் அருட்பெருஞ்சோதி.......*
*இகநிலைப் பொருளாய் பரநிலைப் பொருளாய்*
*அகமறப் பொருந்திய அருட்பெருஞ்சோதி.......*
*சுத்த மெய்ஞ்ஞான சுகோதய வெளியேனும்*
*அத்துவிதச் சபை அருட்பெருஞ்சோதி.....*
*பிரம்ம மெய்க்கதியே பிரம்ம மெய்ப்பதியே*
*பிரம்ம நிர்க்குணமே பிரம்ம சிற்குணமே.......*
*பிரமமே பிரமப் பெருநிலை மிசையுறும்*
*பரமமே பரம பதந்தரும் சிவமே........*

*என்றும் குறிப்பிடுகிறார்*

இவரும் அத்வைதத் தத்துவத்தைப் போதிக்கி றார். அவர் இதனையே சமரச சுத்த சத்திய சன்மார்க்கம் என்றும் குறிப்பிடுகிறார். அவர் மறைவ தற்கு சுமார் நான்கு மாதங்களுக்கு முன்பு ஆற்றிய கடைசிப் பேருபதேசத்தில் (உரைநடைப் பகுதியில் காண்க) சைவ வைணவம் முதலிய மதங்களையும் இதிகாச புராணங்களையும் விட்டுத்தொலையுங்கள் என்று கூறுகிறார். அவர் சிற்றறிவாக இருந்தபோது மத சம்பந்தப்பட்ட விஷயங்களை அருட்பாவில் பாடி யதாகவும் அவைகளை விட்டுவிடவேண்டு மென்றும் மக்களிடம் விண்ணப்பிக்கிறார். மேலும் 'கண்மூடிப் பழக்கமெல்லாம் மண்மூடிப் போக' வேண்டும் என்று சாடுகிறார். ஆகவே மதங்கடந்த மார்க்கமாகிய சமரச சுத்த சத்திய சன்மார்க்கத்தின் மூலமாக ஈஸ்வரத்தை அறிவதற்குப் போதித்தார். இதனால் பாதிக்கப்பட்ட மதவாதிகள் இவர் மீது நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்து முடிவில் தோல்வியுற்றனர்.

சாந்தோக்கிய உபநிஷத்தில் மனிதன் பின்பற்ற வேண்டிய தர்மங்களைப் போதிக்கின்றது. அதில் மனி தன் இளம் வயதில் பிரம்மச்சரியம் (கற்றலையும்) இல் லறம் வானப்பிரஸ்தம் சன்னியாசம் முதலியனவாகும். இதில் அனுஷ்டிக்க வேண்டியவைகள். கர்மம் பக்தி யோகம் ஞானம் எனவும் குறிப்பிடுகிறது. இதனை மொத்தத்தில் 'தர்மம்' என்றே குறிக்கிறது. ஒரு மனிதன் உய்ய வேண்டுமானால் அவரவர்க்கு

அவரவர்கள் விரும்பும் அதற்குரிய தர்மத்தைச் செய்ய வேண்டும். தர்மம் எனும் சொல்லிற்கு நிகரானசொல் எந்த மொழிகளிலும் அறியமுடிய வில்லை. இதைப்பிழைபடவே பொருள் கொண்டு பலரும் பேசு கின்றனர். நமது முன்னோர்களாகிய ரிஷிகள் தர்மத் தின் பொருள் பற்றிக்கூறும் பொழுது 'தர்மம்' என் பது இகத்திலும் பரத்திலும் நன்மை பயப்பதாகும். அஃ தாவது இந்திரிய ஜீவகரண ஒழுக்கங்கள் பரோபகா ரம் தியாகம் சுயநலமின்மை அறிவு பெறுதல் கடமை யாற்றுதல் முதலியனவாகும். விட்டுவிட வேண்டிய வை. பொறாமை, காமம், கோபம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் மற்றும் பஞ்சமாபாதகங்கள் முதலி யன, ஒரு மனிதன் இவைகளைக் கடைபிடிக்கும் போது தானாகவே மெய் ஞானத்தை நோக்கிச் செல்லுகிறான். இதனை அறியாதவனும் பின்பற்றாதவனும் அல்லலு றுகிறான்.

இன்றைய விஞ்ஞானம் தற்போதுள்ள மனிதன் இதே நிலையில் சுமார் 50 இலட்சம் ஆண்டுகட்கு முன்பாகவே தோன்றியதாக ஒரு கருத்தைச் சொல்லுகிறது. இதை ஏற்றுக் கொண்டால் ஒவ்வொரு தலைமுறைக்கும் 25- ஆண்டுகள் எனக் கணிக்கும் போது இன்றைய மனிதனுக்கு சுமார் இரண்டு இலட்சம் தாத்தாக்கள் இருப்பார்கள். இதில் முதல் தாத்தா இந்த பூமியில் எந்த நாட்டில் பிறந்தார்? என்ன

மொழி பேசினார்? எந்த இனத்தைச் சேர்ந்தவர்? என்ன ஜாதி என்ன மதம், என்ன வர்ணீயம் என்பன போன்ற கேள்விகளுக்கு ஒருவராலும் பதில் சொல்லமுடியாது என்பது வெளிப்படுகிறது. ஆகவே ஜாதி, மதம், இனம், வர்ணீயம், நாடு என்று பேசப்படுவதெல்லாம் நித்யமானவைகள் அல்ல. அவைகள் கற்பனையானவைகளே, இனி 50 இலட்சம் ஆண்டுகள் கடந்த பின்பு அன்று தோன்றக் கூடிய மனிதன் என்ன ஜாதி, என்ன மதம், என்ன வர்ணீயம், என்ன இனம், எந்த நாடு ஆகயிருக்கும் என்பதைச் சொல்வதற்கு யாருளர்? ஒருவருமில்லை. ஆகவே இடையில் தோன்றி இடையில் மறைந்து விடும் எந்தக்கருத்தும் நிரந் தரமான உண்மையாக இருக்கமுடியாது. ஆகவே தற்போது இது பற்றி பேசும் மனிதர்கள் எப்படிப் பகுத்தறிவுவாதியாக இருக்கமுடியும்? இருக்க முடியாது. பகவத்கீதை அத்யாயம் 2.சுலோகம் 16-ன் சாரம் 'எதுஒன்று முன்பு இல்லையோ பின்பும் இல்லையோ இடையில் தோன்றியிருந் தாலும் அதனை இல்லாததாகவே (அநித்திய வஸ்த்துவாகவே) கருதப்படும். எது வொன்று எக்காலத்தும் நிலை பெற்றுள்ளதோ அது நித்திய வஸ்த்துவாகும்-ஈஸ்வர மாகும்' மேற்கூறப்பட்ட ஜாதி, மதம் போன்றவைகள் அநித்திய வஸ்த்துக்களே. ஈஸ்வரம் ஒன்றே நித்திய வஸ்து. ஆகவே காலம் தேசம் விஷயங்களைக் கடந்து

எதுவொன்று நிலையாக இருக்கிறதோ அது ஒன்று தான் சத்தியம். அதுபற்றிப் பேசுவதுதான் உண்மை யாகும். அப்படிப்பட்ட நித்திய வஸ்துவே பிரம்மமா கும். அந்தப் பிரம்மம் 'அது நீதான்' என்று உபநிஷத்து பேசுவதால் அதற்குப் பிரமாண்யம் (நிரூபிக்கப்பட்ட உண்மை) உண்டு.

நான் 1950-60-ஆண்டுகளில் மாணவனாகவும் இளைஞனாகவும் இருந்தபோது பகுத்தறிவு வாதிகள் என்று சொல்லிக்கொள்பவர்கள் மதவாதிகளால் நான் சூத்திரன் என்றும் தலித்துக்கள் என்றும் தூசிக்கப்படுவதாகவும் அரசியல் வாதிகள் எனது தாய் மொழியைச் சிதைப்பதாகவும் கூறி என்து உள்ளத்திலிருந்த மிருகக்குணங்களை தீயிலிடும் எண்ணெய்போல தூண்டிவிட்டனர். இதைக்கேட்டதும் எனது இரத்தம் சூடேறிக் கொதித்தது. நான் துடித்தேன் துள்ளி எழுந்தேன். இவைகளை நீக்க வழியறியாது துன்பமும் மனவேதனையும் அடைந்தேன். இதைப் போதித்தவர் களை எனது தலைவராகக் கருதினேன். பிற்காலத்தில் உபநிஷத்து பிரம்ம சூத்திரம் போன்ற அரிய தத்துவ நூல்களைக் கற்றதனால் ஜாதி, மதம், குலம், கோத்திரம், வர்ணீயம், இனம், நாடு, ஆகமங்கள் முதலிய கற்பனைகளில் சிக்கித் துன்பமடைந்த எனது அறியாமையை அறிந்து மிகவும் வெட்கப்பட்டேன். உண்மையில் நான் சூத்திரன் இந்த வர்ணீயத்தைச்

இதைக்கேட்டதும் எனது இரத்தம் சூடேறிக் கொதித்தது. நான் துடித்தேன் துள்ளி எழுந்தேன். இவைகளை நீக்க வழியறியாது துன்பமும் மனவேதனையும் அடைந்தேன். இதைப் போதித்தவர்களை எனது தலைவராகக் கருதினேன். பிற்காலத்தில் உபநிஷத்து பிரம்ம சூத்திரம் போன்ற அரிய தத்துவ நூல்களைக் கற்றதனால் ஜாதி, மதம், குலம், கோத்திரம், வர்ணீயம், இனம், நாடு, ஆகமங்கள் முதலிய கற்பனைகளில் சிக்கித் துன்பமடைந்த எனது அறியாமையை அறிந்து மிகவும் வெட்கப்பட்டேன். உண்மையில் நான் சூத்திரன் ~~இந்த வர்ணீயத்தைச்~~ சார்ந்தவன் என்று என்மீது கற்பிக்கப்பட்டவைகள் கற்பனைகளே என அறிந்தேன். உண்மையில் நான் ஈஸ்வரம்-சிவம்-பிரம்மம்-சத்-சித்-ஆனந்தம் பரஞ்சோதி-அருட்பெருஞ்சோதி என்பதை அறிந்தவுடன் என் சோகமெல்லாம் நீங்கப் பெற்றேன். நான் பெருமகிழ்ச்சியுற்று சாந்தத்தையடைந்தேன். என் சோகத்தை நீக்குவதற்கு நீண்ட காலமானது. என்போன்றே ரிஷி சிதம்பரம் இராமலிங்கமும் நீண்டகாலம் உண்மையை அறியாது கடைசியில் உண்மையையுணர்ந்தார். ஆகவே நீங்களும் சூத்திரன் தலித் ஜாதி மதம், இனம், வர்ணீயம் போன்ற கற்பனைகளை விடுத்து மெய்யறிவு பெற்று சாந்தமடையவிழைகின்றேன். இதுவே எனது குருவாகிய

பகவான் சங்கரரும் சுவாமி விவேகானந்தரும் போதித்த உண்மைகளும் கட்டளைகளுமாகும். எதிர்கால உலகம் அத்வைதவேதாந்தத் தத்துவத்தையே ஏற்றுக்கொண்டு மதங்களை நிராகரித்துவிடும் என்று சுவாமி விவேகானந்தர் தனது தீர்க்க தரிசனத்தை (அவரது சொற்பொழிவில்) குறிப்பிடுகிறார்.

அத்வைதத்தை அறிய வேண்டுமென்றால் ஒரு மனிதன் முதலில் இந்தப் பிரபஞ்சம் எப்படித் தோன்றி இருந்து மறைகிறது. மற்றும் அதன் பரிமாணங்கள் எவ்வளவு என்பதை அறிய வேண்டும். இதுவே முதல்படியாகும். இரண்டாவது இம்மனிதன் மற்றுமுள்ள ஜீவராசிகள் எப்படி தோன்றி இருந்து மறைகின்றன என்பதாகும். மூன்றாவதாக மேற்கண்ட இரண்டும் தோன்றி இருந்து மறைவதற்கு மூலகாரணம் என்ன என்பதை அறிவதாகும். இந்த மூன்றையும் அறிந்த பின்பே அத்வைத வேதாந்தத் தத்துவத்தை அறிய முடியும். முதலில் இந்தப் பிரபஞ்சமும் மனிதனும் எப்படி பிரகிருதியிலிருந்து தோன்றினார்கள் என்ற அறிவை அறிவதாம். இதனை ரிஷி கபிலர் சுமார் 3000 ஆண்டுகட்கு முன்பே தமது சாங்கிய நூலில் தெளிவுபடக் கூறியுள்ளார். இன்றைய விஞ்ஞானம் மிகக் குறைந்த அளவிலேயே கபிலரின் சாங்கிய அறிவை அறிந்துள்ளது. இந்தச் சாங்கியத்தைப்

அறிவால் அறிவதேயாகும். இதற்கு எந்தக் கர்மமும் தேவையில்லை. எந்த மார்க்கத்தையும் பின்பற்ற வேண்டியதில்லை. கடுமையான தவம் செய்ய வேண்டியதில்லை. உபவாசம் இருக்க வேண்டும் மனதையும் புலனையும் அடக்க வேண்டும் என்பன போன்ற கர்மங்கள் எல்லாம் பொருளற்றவைகளே. இதனை அறிய விரும்புபவன் அறிய வேண்டியது இந்த உடல் உயிர் மனம் ஆத்மாவிலிருந்தே வந்தது என்பதை அறிவதாகும். இதனை உபநிஷத்து கூறிய படி 'அது நீ' (நீ ஆத்மா) 'அஹம் பிரம்மாஸ்மி' (நான் பிரம்மம்) என்று சிந்தித்து அறிய ஆரம்பித்தால் ஆரம்ப காலத்தில் அவன் தன்னுடைய சொரூப நிலையிலிருப்பான். பின்பு மனமும் புலனும் மறு படியும் வேலை செய்ய ஆரம்பித்து விடும். இந்த நிலையிலிருப்பவனையே 'ஜீவன் முக்தன்' என்று வேதாந்தம் குறிப்பிடுகிறது. தான் பிரம்மம் என்ற அறிவு நிலையாகஏற்படும் போது இவனிடத்திலுள்ள மனம் புலன்கள் பிராணன் செயல்படாமல் மறைந்து போகும். அஃதாவது ஒளிவந்தவுடன் இருள்தானாக இல்லாமல் போவது போல. 'தான் ஆத்மா' என்ற அறிவு நிரந்தரமாக ஏற்பட்டவுடன் இந்த உடல் மனம் பிரபஞ்சம் இல்லாமல் போகும். இதனையே வேதாந்தம் 'விதேக முக்தி' என்று குறிப்பிடுகிறது.

ஒவ்வொரு மனிதனும் இதே பிறவியிலேயே இந்த முக்தி நிலையை அறிந்தே தீருவான். இதற்குப்

பல பிறவிகள் வேண்டுமென்று சொல்வதெல்லாம் அறிவுபூர்வமாக ஏற்றுக் கொள்ளத்தக்கதாக இல்லை. ஏனென்றால் இந்தப் பிரபஞ்சம் பிரமத்தின் சொரூப நிலையிலிருந்து ரூபநிலையில் தோன்றியதே. பிரமமே பிரபஞ்சமாக மிளிர்கிறது என்று பகவான் சங்கரர் அவர் இயற்றிய மனீஷா பஞ்சகத்தில் கூறுகிறார். இந்தத் தோற்றம் மறைவு சதா காலமும் நிகழ்வதால் முடிந்து விடும் என்று சொல்லுவது ஏற்புடையது அல்ல. தோன்றி இருந்து மறைவது பிரமத்தின் இயல்பே. இதற்கான காரணமெல்லாம் மனித அறிவால் அறிய இயலாது. ரிஷி சிதம்பரம் இராமலிங்கம் அவர்கள் இதனையே அகவலில் 'இயல்பினில் இயல்பாய் இயல்பே இயல்பாய் உயலுறவிளங்கும் ஒரு தனிப் பொருளே' என விளம்புகிறார் இதற்குக் காரணம் கூற முற்படுவது அஞ்ஞானமாகும். மனிதனை பிரம்மத்திடமிருந்து வேறுபடுத்திப் பேசுவதே துவைதம். துவைதம் கற்பனையானது. உண்மையற்றது. இதனை ரிஷியாக்ஞவல்லியர் பிருகுதாரண்யஹோபநிஷத்தில் 'பிரபஞ்சத்தை பிரபஞ்சமாக கருதுபவனை இப்பிரபஞ்சம் அவனை ஒதுக்கி விடும். பிரபஞ்சத்தை பிரம்மாக அறிகிறவனை இரண்டற்ற ஒன்றாக்கி விடும்' அதுவே அத்வைத தத்துவமாகும் எனப்பகர்ந்துள்ளார் ஆகவே பிரமத்தை அறிவால் அறிய முற்படுவதே 'முக்தி' என்று வேதாந்தம் குறிப்பிடுகிறது. அத்வைத வேதாந்தத்தை அறிவதற்கு இது மிகவும் எளிதான வழியாகும். இந்த அத்வைத வேதாந்தத்தைப் பற்றி

அறிவதற்கு கற்பனையான கஷ்டங்களையெல்லாம் துவைதிகள் போதிக்கின்றனர். அவை சொர்க்கம் நரகம் கடவுள் தீர்ப்பு போன்ற கற்பனைகளாகும். துவைதத்தை நிராகரித்தலே அறிவாகும். அறிவால் 'நீ அது' என்று அறிவதே தத்துவமாகும். வேறு எதுவும் தத்துவம் ஆகாது. 'தத்துவம்' என்பதன் பொருள் மாறாத உண்மை, மற்ற அனைத்தும் மாறும் உண்மைகள். பல இடங்களில் மாறும், உண்மைகளை தத்துவம் என்று பேசப்படுகிறது. இது பிழை. ஆகவே தத்துவம் என்ற சொல்லை அறிவுப் பூர்வமாகப் பேசப் பட வேண்டும்.

இதனைப் பின்பற்றும் முகமாக நாம் முதலில் பேதங்களை நீக்கி மனிதர்களிடையே உலக சகோதரத்துவம் எனும் கோட்பாட்டை ஏற்று நடைமுறைப்படுத்தி நாம் அனைவரும் ஒருதாய் மக்கள் எனும் உணர்வோடு வாழ்வதே இப்பூவுலகத்திற்கு நாம் வந்தவரவும் தர்மமுமாகும். பேதத்தை விட்டு ஒழிப்போம். அபேதத்தைப் பின்பற்றி சாந்தத்தை அடைவோம்.

'ஓம் அஸதோமா ஸத்கமய
தமஸோ மா ஜோதிர் கமய
ம்ருத்யோர்மா அம்ருதம் கமய'

என்னும் இந்த சுலோகத்தை விளக்கும் பொழுது துவைதபாவனையில் பொருள் படுத்து

கிறார்கள். அஃதாவது அஸத்திலிருந்து சத்திற்கும், இரு ளிலிருந்து ஒளிக்கும், இறப்பிலிருந்து இறவாமைக்கும் அழைத்துச்செல் என்று. இது பிழை. 'நீ அது' என் னும் சாந்தோக்கிய உபநிஷத்தில் மகாவாக்கியத்தை போதிப்பதற்காக வந்தது. சாதாரணமாக நாம் இங்கு 'நீ' என்பதற்கு அஸத்தென்றும் இருள் (அஞ்ஞானம்) என்றும், இறப்பவன் என்றும் பொருள் கொண்டு அவ் விதம் பேசுகிறோம். இங்கு 'அது' என்பதன் பொருள் நித்திய ஆத்மப் பிரகாசத்தை குறிக்கும். இந்த ஸ்லோகத்தில் நீ நித்தியப்பிரகாசமான ஆத்மாவே என்பதைக் குறிக்கும். ஆகவே இந்த ஸ்லோகத்தை கீழ் கண்டவாறு பொருள் படுத்த வேண்டும். நீ அநித்திய மானவனல்ல நித்தியமானவன். நீ இருள் மயமான அஞ்ஞானமல்ல. ஞான சொரூபி. நீ அநித்தியமான இறப்பவன் அல்ல நித்திய வஸ்துவாகிய ஆத்மா. என் பதாகும் அதாவது துவைதத்தைப் போதிப்பதற்கல்ல. அத்வைதத்தைப் போதிப்பதற்கே இந்த ஸ்லோகம் கூறப்பட்டது.

ஓம் தத் ஸத் சாந்தி சாந்தி சாந்தி

வந்தது. சாதாரணமாக நாம் இங்கு 'நீ' என்பதற்கு அஸத்தென்றும் இருள் (அஞ்ஞானம்) என்றும், இறப்பவன் என்றும் பொருள் கொண்டு அவ்விதம் பேசுகிறோம். இங்கு 'அது' என்பதன் பொருள் நித்திய ஆத்மப் பிரகாசத்தை குறிக்கும். இந்த ஸ்லோகத்தில் 'நீ' நித்தியப்பிரகாசமான ஆத்மாவே என்பதைக் குறிக்கும். ஆகவே இந்த ஸ்லோகத்தை கீழ் கண்டவாறு பொருள் படுத்த வேண்டும். 'நீ அநித்தியமானவனல்ல நித்திய மானவன். நீ இருள் மயமான அஞ்ஞானமல்ல. ஞான சொரூபி நீ அநித்தியமான இறப்பவன் அல்ல நித்திய வஸ்துவாகிய ஆத்மா' என்பதாகும் அதாவது துவைதத்தைப் போதிப்பதற்கல்ல. அத்வைதத்தைப் போதிப்பதற்கே இந்த ஸ்லோகம் கூறப்பட்டது.

ஓம் தத் ஸத் சாந்தி சாந்தி சாந்தி

# மனமும் வேதாந்தமும் – (அறிவின் முடிவு)

1. உணவால் ஆன மனம் சூட்சுமமாய் மனித சரீரத்தில் உள்ளது.
2. மனித மனம் பிரபஞ்சத்திலேயே ஆத்ம சொரூபத்தின் தோற்றத்தில் ஒப்பற்ற 'அதிசய சக்தி'
3. உலகத் தோற்றத்தில் எல்லா உயிர்களுக்கும்அணு விற்கணுவாக மனம் இருப்பினும் மனித மனம் ஆகாயம் போல் அகண்டாகாராமாயுள்ளது.
4. இந்த தேகத்தில் 'நான்' என்று கிளம்புவது எதுவோ அதுவே மனதின் முதல் தோற்றம்.
5. மனிதப் பிறவி இன்ப துன்பங்களை மனதாலேயே அனுபவிக்கிறது.
6. சித்தம் புத்தி அஉறங்காரம் எல்லாம் ஒரே மனமாகிய க்ரணத்தின் கருவிகளே.
7. மனம் பிராணன் இவைகளின் இருப்பிடம் 'இதயகாசம்' அல்லது சிற்றம்பலம்.
8. ஜீவன் (சூட்சும சரீரம்) மனம் சித்தம் புத்தி 'நான்' என்னும் அஉறங்காரம் பிராணன் இவைக ளின் தொகுப்பே தூலப்பொருளின் அருப நிலை.
9. மனம் 'ஸ்படிகம்' போன்றது. எதிரிலுள்ள நிறத் தையும் ரூபத்தையும் காட்டும்.

10. நல்ல மனம் கெட்ட மனம் என்பது இல்லை. பிறப்பு வாசனையால் மனம் அலையும்.

11. சூட்சுமமாகிய மனதில் பிரதிபலிக்கின்ற இன்ப துன்பங்களை தான் அனுபவிப்பதாக ஜீவன் மாயையால் (மறைப்பினால்) மயங்குகிறது.

12. ஜாக்கிர சொப்பனம் சுசுப்தி எனும் மூன்று அவஸ்தைகளின் தொடர்ந்த அனுபவம் வாழ்க்கை.

13. சுசுப்தியில் மனம் செயல் படாது.ஆத்மசைதன்யத்தின் அதிசய சக்தியால் மனமும் தூங்க வைக்கப்படுகிறது.

14. மனம் ஆத்ம சொரூபத்தின் பிரகாசத்தால் கிளம்பும்போது பஞ்சேந்திரியங்களின் செயலால் உலகம் தோன்றுகிறது.

15. மனதிற்கு உலகம் தோன்றும்பொழுது ஆத்ம சொரூபம் தோன்றாது.

16. ஆழ்ந்த உறக்கத்தில் மனம் இல்லை. ஆகவே உலகம் தோன்றாது. ஆத்மப் பிரகாசம் தோன்றி இருந்தும் அறிய முடிவதில்லை. சமாதியில் மனம் இல்லை. ஆனாலும் ஆத்மபிரகாசத்தை அறிய முடிகிறது.

17. நித்யமாகவுள்ளது ஆத்ம சொரூபம் ஒன்றே. அநித்தியமாகிய மனம் முதலானவைகள் மாறிக் கொண்டேயிருப்பவை.

18. ஆத்மா நித்தியமான 'சத்' அதன் இலக்கணம் சத்-சித்-ஆனந்தம்

19. தியான அப்பியாசத்தால் பிராணனை அடக்கினால் அந்த சமயத்தில் மட்டும் மனம் அடங்கும். தியானம் விடுபட்டவுடன் மீண்டும் மனம் அலையும். மனோலயம் நிரந்தரமாக நிலைப்பதில்லை.

20. 'நான் யார்' என்னும் விசாரணையில் மனம் அடங்கும்.

21. 'நான்' எனும் அஹங்காரம் 'என்னுடையது' (மம உறாரம்) எனும் நினைப்புத்தான் பந்தம் - பாசம்.

22. உலகம் பொய்யல்ல. அநித்தியம். சதாகாலம் மாறிக் கொண்டிருக்கும்.

23. உலகப் பொருள்களை மனம் நுகரும் சேர்ந்திருக்கவும் சுகம் அற்பம். நிலையில்லாதது.

24. மனம் ஆத்ம லயத்தால் அடையப்படுகிற பேரானந்தத்தையே முடிவில் தேடுகிறது.

25. அஞ்ஞானம் (unknowledge - Not ignorance) (மாயை அல்லது ஆவரணம்) ஆத்மாவாகிய நித்திய வஸ்துவை அறியவிடாது. ஆனால் அநித்திய வஸ்துவாகிய நான் தேகம் எனவும், அநித்திய வஸ்த்துக்களை 'எனது' எனவும் தோற்றுவிக்கும்.

26. மனம் ஞானத்தால் எப்பொழுது ஆத்மாவில் இலயிக்கிறதோ அப்பொழுது சர்வமும் (பிரபஞ்சம் முழுவதும்) 'ஆத்ம சொரூபம்' என்ற நிலை எய்தும்.

27. ஆத்மா-பரம்-ஈஸ்வரம்-சிவம்-பிரம்மம் எல்லாம் நித்திய வஸ்து ஒன்றையே குறிக்கிறது.

28. இருந்தபடி இருந்து எண்ணங்களை ஒழித்து நிச்சலமாக இருக்கும் பொழுது 'நான்' என்னும் அவஸ்தை உணர்வற்று அதுவே பேரின்பமாக விளங்கும்.

29. ஆத்ம ஞானம் மனம் எல்லாம் கடந்த அனுபவம். 'நான்' என்னும் ஆத்மாவே பிரமம் எனும் ஞானம் எற்படும் பொழுது 'ஆத்ம ஞானம்' தோன்றும். 'நான்' பிரம்மம் என அறிகிறது.

30. தன்னுணர்வு என்னும் ஆத்மப் பிரகாசம் தெளிவுற்ற ஜீவனுக்கு பந்தம் நீங்குகிறது. இதனையே 'வீடு' - முக்தி - மோட்சம் எனும் சொற்களில் வேதாந்தம் குறிப்பிடுகிறது. சஞ்சிதம் ஆகாமியம் பிராரப்தம் எனும் மூன்றும் இவனுக்கு உள்ளது என்று கூறுவது கற்பிதமே.

31. மனமே குண்டலினி, மனம் இல்லையேல் குண்டலினி (பிராண சக்தி) அசையாது.

32. நான் எனும் சங்கற்ப தியாகமே'சந்நியாசம்' மற்று எதுவும் சந்நியாசமில்லை.

33. தான் ஆத்ம சொரூபம் என்பதை மறவாதிருத் தலே முடிவான நிலை. அதுவே 'சமாதி'

34. சூட்சும மனமும் தன்னில் இலயித்து சொரூபத்தின் அனுபவமும் கடந்து ஒன்றும் தோன்றாமல் ஆனந்தத்தில் மூழ்கி அம்மய மாயிருப்பதுவே 'தத்துவம்' 'அது நீ' (ஆத்மபிரகா சம்) என்ற நிலை.

35. எல்லாம் பரம் பொருள் . அது ஒன்றே உள்ளது என்ற பூரண அறிவின் நிரந்தரப் பலன் சாந்தி. சாந்தியை அமைதி என்னும் பொருள்படுத்தக்கூடாது. அமைதி (Peace) என் பது வெளியில் நிகழும் (சண்டை சச்சரவு இன்மை என்னும்) ஒரு நிகழ்வைக் குறிப்பதாகும்.

36. பரம் - பிரம்மம் அறிவிற்கறிவாயிருந்து தத்து வத்தையுணர்த்தும்.

37. தனக்கு அந்நியமாய் தெய்வங்கள் இருக்கிற தென்று தியானிப்பது தன் நிழலை தன் காலால் அளக்க முயற்சிப்பதாகும். அது அஞ்ஞானம்.

38. தன்னையறிய நூல்களில் தேடவேண்டாம். நூல்களில் கற்றவை யாவையும் ஆத்ம மனோலயம் அடையும்போது மறக்க

வேண்டிவரும். அங்கு மனதிற்கும் புத்திக்கும் வேலையில்லாத்தால்.

39. பந்தம், முக்தி யாருக்கு என்று விசாரித்தால் எனக்கு என்று தோன்றும். 'நான் யார்' என விசாரித்தால் 'நான்' இல்லை எனவும், சர்வ நினைவுகளும் ஒடுங்கி ஆத்மப்பிரகாசத்தில் 'நானும்' ஒடுங்கி ஆத்ம பிரகாசம் சுயம் பிர காசமாய் விளங்கும் என்று வேதாந்தம் கூறு கிறது.

ஓம் தத் ஸத் சாந்தி சாந்தி சாந்தி.